உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீ பரமமுனிவர் அருளிச்செய்த

# சித்தாந்தசாரம்.

ஸ்ரீ சிவஞானவள்ளலார் அருளிச்செய்த

## சத்தியஞானபோதம்.

---

இவை

சமிவனக்ஷேத்திரமென்னும் கோயிலூர்

அ. இராமசாமிச்சுவாமியவர்களால்,

பரிசோதித்து

காந்தீசுரம். சொக்கலிங்கசுவாமியவர்கள்

வேண்டுகோளின்படி

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

சர்வதாரிஹூ ஆடிமீ.

1888.



விலை அணா உ.

91/1

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்த சாரம்.

காப்பு - வெண்பா.

மூவாத முத்திநெறி முப்ப தவதரமுந்
தேவாகமத் தின்வழி செப்பவே - மேவித்
திசைவதனத் தான்றனக்குஞ் சீதரற்கு மெட்டாக்
கசவதனத் தான்சரணங் காப்பு.

## நூல்.

கண்ணுதலோனருள்புரிந்தவேதாகமங்கள்
கருதரியபுராணங்களியாவையினுங்கருத்து
நண்ணரியபதிபசுபாசந்தெரித்தலாகு
நலங்கொள்பதியேதுலகவியல்பேதென்னிற்
றிண்ணமுறுமாயைதான்சடமாகியருவாந்
திருந்துருவாய்வரமாட்டாசிவனுஞ்சேர்ந்தறியான்
மண்ணதுதான்கடமாகாகுலாலன்வேண்டு
மற்றதுபோலிறைவனுளன்மாயைநடத்திடவே. (க)

அப்பதிதான்பரமானவானந்தமயமா
யசலமாய்நிராமயமாயமலமாயருளா
யொப்பிலதாயருவுருவாய்ரூபாரூபத்தொருமுதலா
யவைகடந்தவொளியாகிவெளியாய்த்
தப்பில்பரிபூரணமாயனந்தகோடி
தருமண்டப்பரப்பனைத்துமுட்புறம்பாயருவா
மெப்பொருட்குமுள்ளீடாய்வாக்குமனங்கடந்த
வின்பாகியனுவிலனுமகத்தினுக்குமகத்தாம் (உ)

இருள்வெளிபோலாணவத்தாலறிவிழந்தபசுவா
யிந்தமயக்கால்வினைகளீட்டியதற்கேற்ற
வருமருவிநரகசுவர்க்கம்புவியிற்சுழன்றே
யுடல்பொறிகள்மாறிக்கொண்டேழ்வழியானுட்டுந்
திருவருளையிகழ்ந்தேகதேசியுமாய்ச்சித்தாய்ச்
சிற்றறிவாயனுவாகிச்சீவனுயிர்பிராணன்
புருடனெனும்பெயர்பெற்றுமலபரிபாகத்துயிர்கள்
பூதனுபகனருளாற்பூரணத்துற்றிடுமே. (௩)

ஆணவஞ்செம்பிற்செறிந்தகளிம்புபோலு
மழன்றகனலடக்கியிடுங்காட்டம்போலும்
பூணுமுயிர்க்கனுதியாயறிவுதொழில்மறைத்துப்
போதமுறவுயிர்க்குயிராம்பொருளையறியாம
லீணெறிசேருலகியற்கைப்பொய்யினைமெய்யாக்கி
நிறைபுலன்கள்வழிபோதம்புசித்திடவேநிறுத்தி
யேனுயிர்கள்பலவிதத்தாற்சத்திகளும்பலவா
யிரவிகதிர்முன்னிருள்போலருள்பெறினீங்கிடுமே. (௪)

அடல்மேவுஞ்சிவனெங்குநிறைந்திருப்பனான்மா
வப்பொருளைவிடான்பழமுமிரதமும்போலென்றீர்
சடமேவுமலமுயிரைத்தடுப்பதெங்கே
சாதகமாய்த்தேசிகனேசாற்றுகின்றாய்
கடல்போலுஞ்சிவங்கடலிற்புனல்போலுமான்மா
கரியமலந்தண்ணீருமுப்பும்போலுந்
திடமேவுமுப்பந்தக்கடலுக்கில்லைச்
சிற்றுயிர்க்கேமலமிறையைச்சேர்ந்திடாவே. (௫)

இன்னமுங்கேளாகாயத்தேவாயுநிற்கு
மிலங்கியநற்கந்தங்கள்துர்க்கந்தமெல்லாந்
துன்னரியவாயுவுக்கேயன்றியந்தச்
சுடர்விசும்புதனக்குண்டோதுலக்கியவாணவத்தின்
டன்னுமறியாமையினாலிதாகிதமாங்கன்ம
மற்றதனாற்றுக்கசுகம்புசிக்கவேண்டிப்
பின்னுடல்மாயையிலுண்டாமுண்டாகவெல்லாம்
பிணிப்புமுயிர்க்கேயந்தப்பெருந்தகைபாலுறாவே. (௬)

அருளிலுயிர்கூடுநெறிமுப்பதவதரமா
மைம்பூதப்பழிப்புடனேபொறியறநின்றுணர்த
னிறையந்தக்கரணசுத்தகலாதிஞான
கிராகரணஞ்சுத்ததத்துவதூடணமேபிராணன்
பரவுதத்துவரூபந்தரிசனந்தற்சுத்தி
பணியுறுகேவலமந்தக்கேவலத்தைக்காண்டல்
விரிகேவலாதீதமாத்மரூப
மிகுமான்மதரிசனம்பின்ஞானதரிசனமே. (௭)

பகர்ஞானாதீதமப்பாற்பரைதரிசனஞ்சொற்
        பரையோகம்பரைபோகம்பரையிலதீதந்தான்
றுகுசிவனற்றரிசனஞ்சாக்கிராதீதஞ்
        சுத்தவத்தைசுகரூபந்துலங்குசுகாதீதந்
திகழ்சிவப்பேறாத்மசுத்திபரமானந்த
        தரிசனம்பின்பரமானந்தயோக
மகம்பரமானந்தபோகமாத்மலாப
        மானந்தமேலீடுசெகம்பழித்தலாமே. (அ)

பிறங்குபூதப்பழிப்புப்பகருங்காலை
        பிருதிவியப்புத்தேயுவாய்வாகாய
நிறங்களொன்றுக்கையைந்தாய்ப்பரிணமித்தாலுடம்பா
        நின்றநுபோகங்களெல்லாமுடலாத்மாவென்று
யுறங்கிடுங்காலறிவிலைதானொருபொறியிற்றுக்க
        வுற்றறியுமென்றாய்பின்னுயிர்போனாற்பிணமாய்ச்
சிறந்துளோர்கட்டையினிற்புரட்டிவீழ்த்துருட்டித்
        தீக்கொழுவச்சுட்டதென்றுதிரும்பக்காண்கிலையே. (௯)

பொறியைந்துமுயிரென்றாயொன்றறிந்ததொன்று
        புக்கறியாதைந்தையுங்கேட்டுண்டுகண்டுற்றாய்க்கு
மறிவொன்றுண்டதுவான்மாவஞ்சறிவாய்விடுமோ
        வவைகரணஞ்செலுத்தியிடவறிந்திடுமென்றறிநீ
செறிகரணநான்குசேதனமென்றாற்சடமாய்ச்
        சிந்தித்துப்பற்றிநிச்சயித்தெழுந்துநான்காய்ப்
பிறியுங்காணகரவுகரமகரம்விந்து
        பெற்றறியுமுன்னறிவிற்பிரித்துப்பாரே. (௧௦)

கலையாதியான்மாவென்றுரைசெய்தாய்மாயா
காரியமாய்ச்சடமாகிக்கஞ்சுகமாயுயிர்க்குக்
குலையாததொழிலுமறிந்திடவேனுமன்றங்
கோரறிவுமதிலாசையுறுவதுவாமுணர்நீ
தலையானசுத்ததத்துவமறிவென்றுரைத்தாய்
தகுஞானமாய்க்கிரியைதானுமோரிரண்டு
முலையாமலொத்துமதிற்கிரியையேறி
யுயர்ஞானமேறியும்பின்வருமஞ்சுவிதமே. (௧௧)

கருவியெல்லாமொடுங்கிடவுமுடலைநீங்காக்
காரணத்தாலான்மாவேபிராணவாயுவென்று
மொருவர்தொடவுசுவாசநிசுவாசமாக
வுடலினின்றுமுறங்கிடுங்காலுணராதென்னே
புரிகரணமொடுங்குதலாலறியாதென்றாய்
பொய்யுடற்குவேந்தனூர்வாயுவானு
லரசனேயமைச்சனின்றிப்பவனிபோந்தா
னுகுமிதுசடமாம்வேறுன்மாவுண்டென்னே. (௧௨)

தரையாதிநாதாந்தமுப்பத்தாறுந்
தனித்தனியேபருத்தல்தத்துவரூபமாகு
நிரையாயவடிவுகுணந்தொழில்களெல்லா
நினைந்தறிதல்தத்துவத்தின்றரிசனமதாகும்
விரவாதங்கிவைசடமாமென்றுநீக்கல்
விளங்குதத்துவசுத்திமேவியதத்துவங்க
ளொருவியதோகேவலமிங்கிதுவோகேவலமென்
றுணர்ந்ததுவேகேவலத்தன்றரிசனமென்றுணரே. (௧௩)

கேவலாதீதமதுவிடிதலுக்குமிருண்ட
    கிளர்குமரியிருட்டுப்போல்மடிதலுக்காயிருண்ட
தாவதுணதறியாமையகன்றக்காலறிவா
    யாத்மரூபம்பூதமல்லைபொறியல்லை
தாவுகரணங்களில்லையென்றுநாமுணர்த்தத்
    தத்துவங்கணீங்கினையிவ்விருளேதென்றுன்
மேவியுனையின்றளவுந்துடர்ந்தவாணவத்தை
    வியந்திதுவெனக்கண்டறிவுகாணீயே. (கச)

ஆத்மதரிசனமுரைக்கிலுன்னறிவுநீயே
    யறிந்துபாரெனவவைநானறிந்தவிடமெல்லா
மேற்படநின்றவன்யானேயிவைகண்டுநீங்கல்
    வேறுகர்த்தாயிலையுடலைநடத்தலுமியானென்றுன்
சாற்றரியசிவஞானமுனையுணர்த்துமிந்தத்
    தத்துவங்களுன்வழித்தன்றிரவினுன்கைப்பொருளை
வேற்றொருவன்கவரநின்றுவெருவிழிப்பதல்லால்
    வேறுனக்கேதுனையுணர்த்தும்விமலனருள்தானே. (கரு)

அருளானதிச்சாஞானக்கிரியர்சத்தி
    யக்கினியுங்காட்டமும்போற்சுத்ததத்துவத்தைப்
பிரியாதேபிரேரிக்கவினிச்சிவதத்துவங்கள்
    பெருகுமந்திரம்பதம்வன்னம்புவனந்தத்துவங்கள்
மருவுகலையெனவாறத்துவாக்களாயும்
    மந்திரேசர்பதேசர்வன்னேசர்புவனேச
ரரியதத்துவேசர்கலேசர்களுமாகி
    யதோமாயையாய்நிறைந்தகலாதிகளேழினையும், (கசு)

ஏழிடமாய்நின்றுநடத்திடல்சுத்தமாயை
யெழில்வாக்குநாலாகிவசனுதிவிரிக்கத்
தாழ்வில்சூக்குமபஞ்சாக்கரத்தினாலே
தருகரணங்களையுமெழுத்துலவரயவவ்வவரால்
வீழ்பொறிபூதங்களையுநடத்தவிந்த
விரிவெல்லாம்பதங்கள்புவனங்கள்கலைகலந்து
வாழ்வுபெறத்தனித்தனிநின்றியக்கவிந்த
வகையுலகந்தொழில்பட்டுவருதல்சிவன்றொழிலே. (௧௭)

என்றுமருளான்மாவைநடத்தல்கேளா
யிந்திரியங்களையுமந்தக்கரணங்கடமையு
நின்றறியவுயிருணர்த்தவறிந்துடனாய்நிற்கு
நெறிபோலவுயிர்ப்போதமறிவிக்கவறித
லன்றியேசிவபோதமுடனாய்நின்றுணர்த்த
லாதலாலருளன்றிநமக்கோர்செயலிலைநா
மின்றளவுநமதுதொழிலென்றதெல்லாமருளே
யென்றுருகியவ்வருளைப்பிரியாமலிருநீ. (௧௮)

அறிவுபற்றிநீயிருந்தால்விடியற்காலத்
தருணவுதயம்போலவரவுகதிர்விழுங்கிப்
பிறியுமாபோலவொளிமெல்லமெல்லப்
பெருகுங்காண்மனக்கவலையற்றுக்காண
வுறுதிரோதாயிமறைத்துனக்குக்காட்டு
மொளிஞானதரிசனமாமசபைவிந்துநாதம்
பெறுமாதாரங்கள்பிரசாதவேதாகமங்கள்
பின்யோகத்தாலொளிகள்பெறிற்பிறப்பாய்விடுமே. (௧௯)

உலவியஞானநீதஞ்சிவஞானத்தி
னுள்ளொங்கியதன்வசமாயுன்விகாரம்
பலவுமறவிருத்தலாம்பரைதரிசனங்கேள்
பகர்ஞானமிருந்ததனிற்புக்கவொளியெங்கு
நிலவியேபொதுவாகநிரைசெழுங்கதிரோ
னீடொளியுச்சிக்காலத்தெங்குநிரந்தரமாய்க்
குலவுதல்போற்புரையறநின்றிடுதலாகுங்
கூறியவிப்பரையில்வியார்த்தம்புகலக்கேளே. (௨௦)

சாற்றுபரைதிரோதைமுதலனேகமருவுருவாஞ்
சத்திகளாய்ச்சிவனுக்கும்வடிவாகிக்கரணந்
தேற்றுகுணமிந்திரியந்தொழில்களாகிச்
சேர்ந்தசாங்கோபங்கமாகியிருப்பிடமாய்ப்
போற்றரியசரீரிக்கியுலகமாயளிக்கும்
பொருளாகிப்பீடலிங்கமாதல்பரைவியார்த்த
மாற்றரியபரையிலுறையாதுநெகிழாத்தன்
வசமாய்த்தனைமறையநிற்றல்பரையோகம். (௨௧)

கண்டயோகப்பயனால்விளைந்தமணியோசை
கடலோசையாழோசைசேகண்டியோசை
வண்டோசைமதயானைபிளிற்றோசைநாத
வகையோசைகொம்போசைவந்துதோன்றி
லுண்டானபரைபோகம்பரையிலதீதந்தா
னோசையெல்லாமழிவதனிலுறநியிருப்பதுவா
மன்றுசிவதரிசனமிக்கேடெடாவிமல
வளரொளிக்குள்ளொளியாகச்சிவத்தைக்காண்பதுவே, ()

சொன்னபரையொழியவொருபொருளுண்டோவிந்தச்
சுடரொளிக்குள்ளோபுறம்போவிதனெடுகூடுமோ
வென்னெனவேதிகைத்திடுதல்சாக்கிராதீத
மிதிலவத்தையைந்துண்டுசுத்தவத்தையாகு
மன்னுநவமாதல்சிவவிழப்புமாயை
வாய்த்ததனுகரணபுவனபோகமாகுங்
கன்மமறப்பரவசமாய்த்துக்கசுகங்காட்டுங்
கருதுமாமாயையைக்துகாரணற்குமெய்யாய். (உகூ)

அத்தகுமாயையையடத்தர்திரோதைமறைந்துலகை
யமைந்தூட்டுமலமைந்துங்காட்டும்ஞான
சத்தியிடமாகப்பூரணபோகமாய்நிற்றல்
சாக்கிரம்பூரணபோகநிருவிகாரமதாய்ச்
சுத்தபரைமுதலாதனிர்மலசொற்பனமாந்
தூயபரைபோகத்திற்றற்போதமறவமுந்த
லொத்தநிர்மலசுழுத்திபரைபோகமழித்தெழுந்த
துயர்பரமானந்தத்தின்முதலாதல்துரியம். (உ௪)

பரமானந்தத்தனிலேசுட்டறநின்றதுவாய்ப்
பார்த்திடனின்மலதுரியாதீதமாகு
மருட்பரைக்குஞ்சிவத்துக்குமுவமைகூறி
லாதித்தன்சிவன்போலுமதன்கிரணம்பரையா
நிறைமனவாக்கிறந்தசிவமதனிலுறையாது
நெகிழாதுன்போதமறநின்றவிழவிருத்த
லரியசுகரூபமதிலாகாயத்தே
யனிலமடங்குதல்போலுன்போதமறநில்லே. (உ௫)

நின்றபோதவ்வொளிதோன்றிடுமெந்தநிலையி
    னீக்கமறநின்றதுவேசுகாதீதமாகு
மென்றுமதுபாவித்தல்பாவனைவிட்டிருத்த
    லிவையாகாநேரென்றுநேர்பெறினுமாகா
வொன்றியுறைத்திடலாகாவுறைப்புவிடலாகா
    வுயிருமதன்வசத்தென்னிலிரண்டாகுமதனு
லென்றிடிலஞ்ஞானமாமெல்லாநாமென்று
    லிகலாத்மவாதமாமிவையொழித்துப்பாரே. (உசு)

நீரவிக்தமுறையிருந்தாற்சிவம்பிரகாசிக்குஞ்
    சிவப்பேறுத்மசுத்திசெப்புங்காலை
யாருயிரஞ்ஞானத்தேகூடிடிலஞ்ஞானி
    யதுதானித்திரையாகுமவ்வுயிர்சத்தோடே
சார்வுறுசத்தாகுமிதுபரையுணர்சாக்கிரமாஞ்
    சத்துமசத்தும்புணர்ந்தாற்புருடரூபஞ்
சோர்வறவிந்நிலைக்குள்ளேயுண்டாம்போதத்தைத்
    தோற்றிவிய்யாமற்காணப்பட்டவொளிதொடர்ந்தே. (உஎ)

அந்தவொளிக்குள்ளடங்கியநீதப்பட்டுறெங்கா
    தமுந்தினிகண்டசிவத்தின்பசத்தியெனலாய்
முந்துசுகாதீதமாஞ்சுகாதீதத்தின்
    முயன்றுபயின்றிடிற்சிவப்பேறுகுமிதுகாண்டல்
வந்திடுங்காணுத்மசுத்தியிதுசிவப்பேறுகு
    மற்றதுபெற்றேருமென்றுகருதாதெள்ளளவுஞ்
சிந்தைநினைவற்றெழுந்துசித்திரமேபோலத்
    திரையற்றதெள்ளமுதக்கடல்போலுஞ்சிறந்தே. (உஅ)

அன்புருகியுரையாதுநெகிழாதுபற்று
தனைநிலைதெரியாதங்கமுந்தில்மகத்தான
வின்பசுகமேபரமானந்ததரிசனமா
மிவைதெளியவுருக்கினபொன்போற்சலனமின்றும்
பின்புபரமானந்தயோகநிறைநீரிற்
பெருகவிழித்தவர்க்குநிலந்தோன்றுமாபோ
லொன்றவுருகியசெம்பிற்கனற்பொறிதோன்றுவபோ
லுனதறிவிற்செருக்கறவானந்தமுதிக்கும். (௨௯)
நீடுபரமானந்தபோகமுயிர்சிவத்தே
நிற்குநெறியாவணமுமான்மாவும்போலத்
தாடலைகாறலைபதத்தின்றன்மைபோலுஞ்
சாற்றிலொன்றாகாவிரண்டுதானுமாகா
நாடியிரண்டொன்றாகாவதன்வசமாயின்ப
நலம்பெறலாநாவிரதம்புசிக்குங்காலை
கூடியநாவிரதமோவிரதநாவாமோ
கொண்டிருந்நாவருந்தல்போலாத்மலாபம். (௩0)
அன்றலர்ந்தபூவின்மதுநிறையவாரி
யாவலுடனுண்டவண்டுபூவையலையாம
னின்றதிலேயுறைகின்றேமென்பதறமயங்கு
நெறிபோலத்தேகவிகாரங்கணீங்கிச்
சென்றுதெளிவுற்றுவசமுற்றந்தப்பொருளைச்
சேர்ந்தபோதுனைவிழுங்குந்திரும்பவிடாதிதுவே
நின்றபரமானந்தமேலீடாமிந்த
நிலைநின்றோர்சாயுச்சியநிலையினரே. (௩௧)

சித்தாந்தசாரம் முற்றுப்பெற்றது.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சத்தியஞானபோதம்.

கணபதி காப்பு.

சூத்திரம்.

பிளிறுமாதங்கப் பிரானடிவணங்குதுங்
கருவியங்கயிற்றைக் கதுமெனத்துமியா
மருவினைப்பாகன் வாயின்மண்ணட்டாக்
கண்மனமறிவில் காமுகர்நுழையா
வல்பகலிரண்டினு மணுகாமுத்தி
நெடுவனம்புக்கு நிலாவுதற்பொருட்டே.

## நூல்.

## பதியியல்.

உலகமுமுயிரு மொருங்குறப்படைத்தவ், வுயிரிடைஉடனமோ வாதனுற்றினு, மாருயிரறியா வற்புதமென்கொல், லுலகமார்த்தாண் டனொளிகொடறிந்து, முலகமார்த்தாண்ட னுருவறியாவே. (க)

உவனுவளுதுவெனு முறைமுச்சுட்டாய்த், தோன்றிநின்றொடுங் குந் தொழிலுளவதனுற், பொன்விழுதனைய புரிசடைமுக்கட், சிவ னுள னவனுற்சிவனுமுண்டா, யறிவினைமறைக்குமவிச்சையுமுளவே,

பொன்பலபூணும் மண்பலகடமாய், வருவதுதானே வருதலின்மை, தருபவனொருவன் முனுளனதுபோற், பொன்புரைகடுக்கையம் புண்ணியனுளனே. (ரு)

நிரவயனிமல னிராமயனருளை, யொருவிடிலாவியுலவாக்காலம், போலாமாக்கை புணைகைப்பிடியா, யானெனதென்னு மிருஞ்செருக்கடையா, நமர்பிறரென்னு ஞானமிக்குறுமே. (சு)

அகாயனசல னந்தரியாமி, யருளொடுங்கூடிக் கூடாவான்மாத் தீபிரும்பென்னச்சிந்துறுநதியெனத், திருவடிநிழலிற் சேருமன்றே.

மலர்மணமணியொளி மன்னியவண்ண, மாவிக்கியல்பு மபிமுகமாதனு, மாகாயம்போ லாந்தரங்கண்டாங், கெழுமியெங்கனுமாய்க், கிளரொளிச்சடையனைப் பின்னியொன்ருகிப் பெறுமெனுநூலே. ()

நீரிடையுப்பும் பாரிடையப்புக், தாயிடைச்சூலுந் தளிரிடைத் துவளுந், தீபிடைவெம்மையுஞ் செறிந்தாங்கன்ன, வறிவிடையீசனமர்ந்தாங்குறலே. (எ)

அத்துவிதம்பெற வாங்காங்கிருப்பினு, மாருயிரறிவா லறிதரப் படாஅ, வூனக்கண்ணுக் கொளியாதொளித்து, ஞானக்கண்ணின் வெளிப்படுநாதன். (அ)

அவனைக்காணு மறிவன்பாலே, காந்தம்பசாசைக் கவர்ந்தனமான, வொன்றென்றுன்னு மூற்றையவ்வூழிப், பிரளயம்வாயிற் பெய்தனவன்றே. (கூ)

பூவைத்தேடியும் பொருளைத்தேடியுங், காணாளவில் கற்பத்தும்மே. (கo)

தரையிதுவென்னத் தான்கண்டாற்போற், பொருணியென்ன வறியாப்புவியே. (கக)

ஒன்றோவிரண்டோ வுபயப்பெருக்கோ, வறிதரப்படாவோ வவயவமிலியை, யாழிவாய்ப்பட் டழிலவணக்குவால், காணுதியாயிற் காணுதிநீயே. (கஉ)

அறிவான்போந்த வறிவைவிழுங்கிக், குரைகடல்விழுங்கிய குறுமுனிமானச், செறிவான்சிவனெனத் தேறுதிநீயே. (கங)

குருட்டுச்சேரியிற் கோடியாதவர்க, ளூலவினும்பேசினு முறங்கினுமென்கொல், புலன்றெரிகாலைப் பொதுவறநிற்பினும், பாடிகாவலிற் பட்டனவுயிரே. (கச)

வியாபகமாதி விரிக்குங்காலை, வியாபகமேலிடு நிறைவாமென்ப, வியாத்திசமநிறை வாகும்விளம்பின், வியாப்பியமொன்றின் மிடைந்தநிறைவே. (கரு)

வியாபகங்கடலே வியாத்தியர்நீரே, வியாப்பியமுவரென விளக்கியநூலே. (கசு)

வியாபகமீசன் வியாத்தியாருயிர், வியாப்பியமலமென வீக்கிய நூலே. (கஎ)

வியாபகங்கதிரேவியாத்திக்கண்ணே, வியாப்பியமிருளெனவிதித்தனநூலே. (கஅ)

சமட்டிவியட்டி சாற்றுங்காலை, சமட்டியாகாயந் தணித்தவியட்டி, குடவானெனக் கூறற்பாற்றே. (ககூ)

அமலன்சமட்டி யாருயிர்வியட்டி, யமலனேடொன்றி லாருயிர் சமட்டி,வியட்டியாக்கை விளம்புங்காலே. (உ0)

ஐயெரிநாப்பனைத் தவித்திருப்பினு, மிருகாலடக்கி யொருகா னிற்பினுஞ், சேயிழைமாதரைத் தீரத்தணப்பினு, முடையைத்துறக் கினு முணவைமறப்பினு, மம்மர்செய்மாயை மழுங்காதம்ம, குருபர னேக்கிற் குழையுமன்றே. (உக)

மாரியைநோக்கும் வனப்புட்பொலும், பாரியைநோக்கும் பா வலர்போலும், கொழுநனைநோக்குங் குலமகள்போலுந், தேசிகை நோக்குஞ் சீடன்றெரிவே. (உஉ)

கட்டிமையொத்துக் காற்றுணைவரும், பக்குவர்க்கிரங்கிப்பர சிவனுருவத், திருவடியானுந் திருநோக்கானு, மையலகன்றமறை நூலானும், பாவனையானும் பரிசத்தானும், யோகத்தானு முணர்வா க்கும்மே. (உரு)

ஆ சூத்திரம்-உரு.

பதியியல் முற்றிற்று.

---

## பசுவியல்.

---

கட்டியகட்டோ கருமலக்கட்டு, பூட்டியதனையோ பொன்கு கலைசத்தனை, யடைத்தவச்சிறையோ வறிவிலாகச்சிறை, யெனிலுயி ர்க்கள்வ னெங்ஙனமுயுமே. (க)

இருவினைமுசலம் யாக்கையுரலே, யதிற்பெய்பண்டம் போலா ருயிரே, நிரைநிரைதாக்க நெளிவபுழுங்கி, யடுவான்காலை யல்லற் பட்டு, விடுவான்காலை விம்மிதமுறுமே. (௨)

கொடிவிழியன்ன கொள்கையனாகி, யாசாபாசத் தார்ப்புண் டன்றே, தன்னைமுன்னிட்டுத் தான்பின்னாகி, மறந்துநினைந்து மதி கதனாகி, யாகம்பேணி யறிவைமறந்தாங், கிச்சைபுலிவா யிடர்ப்படு முயிரே. (௩)

ஆணவமாதிய வாப்பையாவி, தானவிழ்க்கரியா தானேயவிழா, கரணமொடுக்கிக் கருதியகாலைச், சங்கரனவிழ்க்குந் தயைக்கையா லே. (௪)

சனுதக்குருட்டுச் சந்ததியிருட்டறை, வாய்ப்பட்டாங்கு மல வாய்ப்பட்டுப், பன்னாளழுங்கிப் பருவரலுழக்கு, மனுதிகேவலத் தா ருயிரம்ம. (௫)

கலைமதிச்சேகரன் கலைக்கையாலே, கட்டவிழ்த்திடலுங் கருவி யிற்புக்கிக், கோலங்கொண்ட வாறைக்குறைத்து, ஞாலங்காவலனு னெனுமுயிரே. (௬)

கருத்தளைபுக்கிக் கண்முனர்த்தோற்று, வாணவப்பாம்பின் வா யகப்பட்ட, சீவத்தேரைச் செந்நெறிகாணுப், பன்னாளலம்வரல்பசு வினியல்பே. (௭)

விந்துமோகினி மானெனவிரிந்த, தத்துவக்காட்டிற் றனித்திடு முயிரை, யாணவவேங்கை யொருபாலடர்ப்ப, மாயைக்குடாவடி யொருபான்மயக்கக், காமியக்கடமா யொருபாற்கறுவ, விருவினை

மலைப்பாம் பொருபாலிழுக்க, வாசையாமண்ணையொருபாலறையக், குலமெனுஞமலி யொருசார்குரைப்பக், கல்விக்காளியா ரொருசார்க வரச், சமயச்சுறை யொருசார்தாக்க, வவாவெனும்படுநீ யறிவைக் கொளுவ, மாயாவாத வனசரர்வெருட்ட, வின்னணமாவி யிடருறுங் காலை, யுயிரிடையொளிபுக் கிருந்தவொருவரத், தாயினுஞ்சாலத்த யாகிஇரங்கிக், கட்கடைவாளாற் காடறமாற்றஉ, முட்கினயாவு முயிர்பிழைத்தன்றே. (அ)

பசுவியல் முற்றிற்று ஆ. இயல்-உ-க்கு, சூத்திரம்-௬௧.

---

## பாசவியல்.

---

செயற்கையியற்கை தெரிக்குங்காலை, செயற்கையுயிர்க்குத் திரி மலமென்னில், வெண்மடிக்கழுக்கு விரவுந்தன்மை, போலநீங்கிப் புகுவனவதுவே. (க)

இயற்கையுயிருக் கிருண்மலமென்னி, லிருந்தைகறுப்பு மெழிற் பால்வெண்மையு, மிடையில்விடாதென் றிசைத்தனர்புலவ, ராயின ஞதி செயற்கையாமே. (உ)

மலமிலைமாயை மறைக்குமென்னின், மலகுணமறைத்தல் மா யைவிளக்க, லளைபுக்கொடுங்கிய வரவின்வாலுள, தலையிலையெனு ஞ்சொல் சவலைச்சொல்லே. (௩)

மாயாதனுவின் மன்னியவான்மா, கன்மவிருப்பங் கருமலமின்றே, லேயாதொன்றை யிடருமுறுவே. (ச)

கன்மமயக்கக் கடுமலமறைப்ப, மாயைவிளக்க வருவனபோவன, மூவகையுயிரு மும்மையவுலகிற், கறங்கெனச்சுழன்று கதிதொருமடுத்தவே. (ரு)

அவிரொளியீசனையன்னியனென்று, மிருள்புரியாக்கையையானெனதென்று, மன்னியமடந்தையை யாருயிரென்று, மூன்றுறச்செய்த லுயிர்மலமோரே. (சு)

குருவைக்கோறல் குருமொழிமறுத்தல், குருவைவணங்கக் கூசல்பிழைத்தல், குருப்பொருள்கவர்தல் மாயைக்கூறே. (எ)

செருவினுழைத்த றீமலதழுத்தன், முக்கரணத்தொடு முந்திடதூக்கல், செருக்கிகழ்கூறல் சிற்றினமருவல், குலம்பாராட்டல் கன்மக்கூறே. (அ)

நிச்சயமறவி நீடஞ்ஞானம், விகற்பந்தீமை விரோதந்துஞ்ச, லழிபொருள்வேட்ட லல்வழிச்சேறல், பொய்மொழிகூறல் புணர்ந்ததைவெறுத்த, லெனைநிகரில்லை யான்பரமென்ன, லச்சமிலாமை யாணவக்கூறே. (க)

ஈட்டலிரத்த லிழுக்கையியற்றல், வேட்டல்வெறுத்தல் விதிவழிச்சேற, லறிவைமறத்த லாகம்பேண, லோதியவெட்டு முயிர்க்குணமென்ப. (கo)

அவாவறலீத லானவைகுயிற்றல், விருப்பறன்மகிழ்தல் விதி நெறியகற, லறிவைநினைத்த லாகமொறுத்தல், பன்னியவெட்டும்பதி குணமென்ப. (கக)

முதரைவியத்தல் மொய்மலர்தணத்த, லடியரைக்காணி லக முடைந்தழுதல், சில்லோர்குழுவைத் தீதெனத்தேறுத, லருச்சனை வணக்க மன்பிவையேழும், பிறவாக்காலைப் பிணைங்கெழுகுறியே. ()

பசுநூலோதல் பழிமலங்கவர்தல், சான்றோர்க்கலக்கண் சால விளைத்தல், புல்லினஞ்சேர்தல் புகர்த்தொழில்புரிதல், கயவர்வணங் கல் கல்மனமேழும், பிறப்புறிமன்றப் பெருகுறுக்குறியே. (கங)

அருளெனுமலைமக ளவளொடெங்கலத்தல், முழுதுணர்ஞான முழுவதுமுடைமை, முழுதனுக்கிரக முழுப்பரிபூரண, மனுதிமுத்த னவயவமிலாமை, யவிகாரக்குறி யரற்கெண்குணமே. (கச)

அரிசடுவேருக்க மடலர்ச்சனையொடு, வணக்கம்பரவுயிர்க் கன்ப கமதிநூல், பெருந்துறையெங்கு நிறைபொருள்பேண, லருளினக் கூட்டமடுபவநடுக்க, மறைகுணமெட்டு மடியர்க்கமைத்தவே. (கரு)

கதிரிடைக்கலந்த கண்ணொளியொப்ப, வைவகையவத்தை யா ன்மாநீங்கிச், சிவத்தொடேகலந்த தேற்றமென்ப. (கசு)

நோக்கானோக்கை நோக்கானோக்க, நோக்கானோக்க நோக்கு மன்றே. (கஎ)

பாசப்பகுப்பும் பஞ்சவிந்தியமு, மந்தக்கரணமு மைவகைப் புலனு, நீங்கநீங்கி நிறையிருள்கடந்த, பரையொடுமெளாவிப் பரை நிலைகடந்த, வறிவொடுங்கலந்த வான்மாப்பாச, சாலங்கடக்குமென் னுஞ்சைவமே. (கஅ)

சேதனமான்மா வசேதனஞ்சிவஞ், சேதனமான்மா வறிவை மறையா, சேதனச்சிவனைச் சேர்தரிலாவி, சேதனனன்றிச் சித்தா பாசனே. (கக)

கருவிக்கான்மாக் கத்தாகருது, மறிவுக்கரனே யாயிற்கத்தா, கருவியையருளாற் கழற்றியவாவி, யருளாய்நிற்கி லவனிவனுமே.()

சடத்திரணிப்பத் தனித்திடுமான்மாச், சோகம்பாவனை தொக் கியபின்றைக், கருடனைநினைப்பான் கடுக்கழன்றன்ன, வுபாதிநீங்கி யுணர்வாயினவே. (உக)

அறிவறியாமை யகலாதகன்ற, வறிவேசிவமெனு மாகமமு டிவே. (உஉ)

கண்கதிர்பண்டங் கழியிருள்கிரணம், விளக்கெனுமாறு நிரை நிரைவிளக்குது, முபிரேயிறைவ னவனுனுறுபொரு, ளதனைமறைக் கு மாணவமதனைத், தணக்கவந்த தண்ணருளதனை, யறிவான்வந்த வாக்கையொடாறே. (உங)

இருவினையொப்பா லிருண்மலப்பாகம், மலபாகத்தின் மருவும் பாதம், பாதப்பதிவாற் பயிலுங்குரவன், குரவன்வரலுங் கொடும் பவமேழுக், தனித்தனியேர்டுந் தலைகெட்டன்றே. (உச)

பாசவியல் முற்றிற்று. ஆ இயல் ங-க்கு, சூத்திரம்-டுடு.

# உபதேசவியல்.

ஊனுயிர்வேற்றை யுரைக்குங்காலே, யென்மாடென்மனை யெ
ன்பான்போல, வென்காலென்கையென்பனவேறே, பருத்தேனிளைத்
தே னெனும்பன்மொழியா, னவயவமான்மாவாகுமென்னிற்,சின்னு
ணின்று தேய்ந்தரமாய்தலி, னவயவமான்மா வன்றெனவுணரே. (க)

ஐம்புலனறிதலி னவத்தைப்படுதலி, னுணராக்கால முடல்சவ
மாதலி, னருத்தாபத்தியி னுலுளனான்மா. (உ)

பிறத்தலுமிறத்தலும் பெருகலுஞ்சுருங்கலும், போதலும்வருத
லும் புணர்வுநீக்கமு, மன்னமயத்துக் கடுத்தனவாதலி, னன்னமய
கோச மான்மாவன்றே. (௩)

ஒருமரத்திற்பே யுண்டிலையென்ன, லைநீகம்மற வாக்கையகத்
தே, யான்மாவுளவென் றறைந்தனனூலே. (௪)

கோசரமுடல மகோசரமான்மா, வவயவங்காய நிரவயமான்
மா, வாதிகாய மனாதியான்மா. (௫)

பொய்மைசடல மெய்ம்மைபுருடன், சொற்பிரமேயந் தோன்
றியயாக்கை, யப்பிரமேய மான்மாவன்றே. (௬)

ஐம்புலவேட ராற்றனைமறந்து, கரணமென்னுங் கடிசுரன்ஞா
னி, சூழ்தரப்போதத் தனிவிற்பிடித்திட், டிரக்கமின்றிய வீயிசைக்

குயிற்றிப், பிறவியங்கானிற் பேதுறுங்காலைச், சிவநரபாலன் றிருவுளத்திரங்கிச், சிவவேடு நீக்கித்தேற்றித், தன்னருள்காட்டித் தானாக்குமே. (எ)

இருவினையீட்டி யீட்டாவியல்புங், கருவியிற்றோய்ந்துந் தோயாக்கலப்புஞ், சிவனலனாகியுஞ் சிவனார்தரமுங், காட்டியீட்டன கருணைக்கையே. (அ)

சிவனியானா யென்னுந்திகழ்வுஞ், சிவனானே னென்னுந்திறமுஞ், சிவனேயாவினு முளனெனுந்திருவுஞ், சிவனேகாட்டித் தெளித்தனனெனக்கே. (கூ)

தசகாரியத்தைச் சாற்றுங்காலைத், தத்துவம்யாவும் சடமெனக்காண்டல், தனித்தனிச்செயலைத் தானறிந்திடுதல், இவைமல நாமலமென்னத்தணத்த, றத்துவரூபந் தத்துவதரிசனந், தத்துவசுத்தி நிரைநிரைதானே. (கo)

அறிவாகரனா னெனவறிந்துணர்தல், செறிபரப்பிரமம் யானெனத்தேற, லறைசிவனருளி லடங்காதடங்க, லுருவதரிசனஞ் சுத்தியுமுயிர்க்கே. (கக)

சுகமயமீசன் சொரூபங்காண்ட, லச்சுகமயனை யாங்காங்கறித, லவனேதானா யச்சுகத்தழுந்த, லிவனவனாகி யின்பமேலிடுதல், லுருவந்தரிசனம் யோகம்போகமே. (கஉ)

உயிருபலக்கலி னுணர்பானுப்படின், பஞ்சவிந்திரியப் பன்னிறங்கவரா, துணரொளியாவு முபலங்கவர்தலி, னென்றேயாமென் றுணர்தற்பாற்றே, (கங.)

தாடலைபோன்றரன் றன்னோடொன்றாய்ச், கண்ணுங்கதிருங் கலந்ததோற்ற, மன்னமோக்கந் தமர்வனவுயிரே. (௧௪)

சக்திரியிறக்தஞ்சக்திரனிறவாத், தன்மைச்சிவஞ் சிவனவன்பாலே, யேயுமன்ன வென்மனூர்புலவர். (௧௫)

கன்னன்கௌந்தி புத்திரகதைபோற்,சிவன்சிவத்தாற் சிவலிங்கி, மாசறுதிங்கள் மண்டிலம்போன்றுங், கவாவிறந்தொளிரு மதிசயம் பெறுமே. (௧௬)

கூன்மதிச்சடிலக் குன்றவிற்குளவி, மாலறியாதமலர்வாய்ப்பட்ட,சிடக்கிடந்திசைமுகனறியா, முடியாவின்பமுடிபெற்றனவே. ()

புவிமுதனாத மீறெனப்பொலிந்த, தத்துவசாலங் கடப்பான் கடக்திட், டறிவறியாமை யாங்காங்ககன்று, ரருளோடுங்கூடி யரன்பாலொன்று, யருளையுமறந்தபின் னறியகிலேனே. (௧௭)

ஆலம்பன்னிவனவனிராலம்பன், சுதந்தரமிலியிவனவன்சுதந்தரனே, சரீரியிவனசரீரியவனெனு, மலநீக்கத்தி லிவ்வழக்கின்றே. ()

அஞ்செழுத்தன்மை யறையுங்காலே, சிவாயநமவெனுந் திருவாக்கியத்திற், சிவமருளான்மா திரோதைமலமிவை, பாந்தளைகலியாப் பருவிடம்போன்றச், சிவன்றனைமறையாச் சீவனைமறைக்கு, மதோமுகமாகி லறிவைமயக்கு, மூர்த்தமுகத்தி லுருவழிந்தனவே. ()

அருளம்பலத்தி லருளுருவாகிச், சிகாரம்பிரமந் திரைமலநீங்கி, யகாரவுயிர்தன் னடியிணைசேர்வான், றிருநடஞ்செய்யுந் திருத்தில்லைக்கணே, (௨௧)

உபதேசவியல் முற்றிற்று.

ஆ இயல்-௪-க்கு, சூத்திரம்-எ௬.

---

# அணைந்தோரியல்.

## முதற்காண்டம்.

கஞ்சுமிழ்பகுவாய் நாகபூடணன், றேனவிழ்கமலச் சேவடிநீ ழன், மலவெயிற்கொதுங்கி மதிநலம்பெற்றோ, ராணுத்தன்மையறை குதுமெடுத்தே. (க)

வேழமயின்ற வெள்ளிலங்கனியோ, வழல்வாய்ப்பட்ட வாடை கொல்லோ, வாய்முலைவயா மாய்ந்தவான்கன்றோ, நனையவிழ் கொன்றை நாதனதருளா, லகக்காழற்ற வடியவர்மாண்பே. (உ)

மணிப்பாம்பிருளை மழவாயிழையைச், செல்வன்சிறுமையைத் தீயன்குளிரை, யாக்கனிரக்கை யறியாப்போன்று, மாதேவன்கழல் மன்னியவுயிரு, மறியாபிறப்பி னவத்தைப்பெருக்கே. (ங)

ஊமைகனவுமூழின்வரவு, மாழிநிலையுமகல்வானிறைவும், பன் னியுளமும் பதிதர்மயக்கு, மலநிலையகன்ற மாதவர்வரம்பு, மியம்பு தற்படா வென்மனார்புலவர். (ச)

இரக்கமும்வணக்கமு மிறந்தவவாவு, மிணங்காதவரோ டிண ங்காவிணக்கமுஞ், செம்மலாலயந்தொறுஞ்செல்லுந்திறமு, மும்மல மகன்ற முத்தர்பாலுளவே. (ரு)

பூரணபோதப் பொருடானகலி, ஞானமாகம் மவர்க்கென்செ யவே. (சு)

நினைப்புமாப்பு நீத்தமையாலே, யனைத்துங்கண்டுங் கண்டிலரன்றே. (எ)

பதியெனிற்பாசத் தோடிலையென்றும், பசுவெனின் முத்திப்படு தலுமின்றே. (அ)

ஞனியபாச மாண்டுழிச்சோதி, நானதுவென்னு ஞானமுமின்றே. (கூ)

ஐவகைஞானத் தந்தரவான்மா, வாக்கவையிறப்பி னதுபரமான்மா. (க0)

மாயைமயக்குங் கன்மவழக்கு, மூலமலத்தின் முடிவின்மறைப்புஞ், சுயம்பிரகாசர்க் கிலையெனுஞ்சொல்லே. (கக)

முன்னலுமுரைத்தலு முறுதொழிலுஞற்றலு, மாவிக்கிலைபொறியறிவொடுமொய்தலி, னுக்கைமாட்டென்றறைந்தனர்புலவர். (கஉ)

சிதம்பரமாதலிற் சேர்விடமில்லை, யவனிவனுதலி னணுகலுமில்லை, யறிவுறுவாதலி னுக்கையுமின்றே, (கங)

ஒன்றேயாதலி னுணர்பவனின்று, நானதுவாதலின் ஞானமுமின்றே. (கச)

சேர்வின்மறிந்து சேர்வானுெத்த, பன்னகபூடனன் பாதப்புனையா, னிந்தர்க்கடலை நீந்திப்போந்தனர், தானாய்நின்றதனிவான் கரையே. (கரு)

சத்தஞ்சோதிடந் தருக்கங்காவியங், கொக்குவம்பாரதங் கோதெ ணத்தள்ளாப், பித்தர்க்கிந்நூல் பேசிற்பிழையே. (கசு)

பிறவிக்கடலைப் பின்னிடமுன்னூற், புணைதாவென்னப் பொரு மியிரந்து, பன்னாட்கேட்கும் பக்குவநோக்கி, யன்னோர்க்கிந்நூல றையலுமாமே. (கஎ)

கோறல்வெகுளல் குறைகொள்குணத்தன், றிருவருளில்லோன் செகமுகனையன், வழிபாடில்லோன் மந்தனிவர்க்கிங், கிந்நூலறையி னேழைக்குருவே. (கஅ)

ஆவிக்குரிய வறநூல்புகன்றுபின், சத்சஞ்சோதிடஞ் தருக்கம் புகன்றவன், சுவர்க்கம்புகுத்தித் துயருறுநிறையப், பதிபுகுவிக்கும் படிறனன்றே. (கசு)

*நுனுதிகமின்றி நுண்ணுணர்வாகி, யனுதிமுத்த னருளியவாக மர், தந்திரகலையெனச் சாற்றலுமாமே. (உ0)

மனுதிகளொடுக்கி மறைமுடிவுணர்ந்து, வழிபடன்மந்திரகலை யெனமதியே. (உக)

அறியாவறிவ னருளிற்கலர்தாங், கர்தவனொளிபுக் கழுந்தியக ண்ணாய், மும்மைப்பாழு முறைமுறைகடவா, வபாவப்பாழி னடங் காதடங்க, லுபதேசக்கலை யிஃதெனவுணரே. (உஉ)

---

* நானுதிக்கம் - நனுதிகமெனக்குறைந்தது.

கேவலஞானக் கிழவனுளுடைப், பிள்ளைநாவரசு பேராரூர, னாதனவாக்கியனருந்தமிழ்மூலன், சிவன்முத்தர் திருவாய்மலர்ந்த, நூல்பலநோய்க்கு நன்னியமருந்தே. (உ௩)

ஆ சூத்திரம்-௧௧.

முதற்காண்ட முற்றிற்று.

---

# இரண்டாங்காண்டம்.

---

உடலெனும்பெண்ணையுயிரெனுநாயக, னெந்நாள்விடுவனெவ்வழியானே, விடுவதில்லை விதியுள்ளளவும், விதிவசமின்றேல் வெறுப்புற்றிடுமே, வெறுப்பும்விதியின் மேம்பாடாமே, யறிநூலிடத்துமற் றவரிடத்து, மாக்கைவெறுப்புமகங்கரவானியு, முறுமெனக்கண்டாங் கொழிந்திடுமோனு. (௧)

ஈசனென்போ னெவ்வணமவன்யா, ருலகமீன்ற வொருவனுமாயி, னுங்கவனெங்குளனுலயத்துள்ளா, னுலயம்புகினுமவனைக்காணே, னுமருப நட்டமாதலி, னீசனைக்காணே னென்செய்கேனே. (உ)

நீரிடையிருப்பனிலத்திடையிருப்பன், காற்றிடையிருப்பன்கனலிடையிருப்பன், விண்ணிடையிருப்பன் வெயிலிடையிருப்பன், மதியிடையிருப்பன் மனத்திடையிருப்பன், றதியிடைநெய்போற் சங்கரன்றானே, (௩)

உருவோவருவோ வுபயப்பெருக்கோ, காணும்பொருளோ காணுப்பொருளோ, கரியோசெய்யோ கைகாலுண்டோ, வுண்பதுமுறக்கமு முடையுமுண்டோ, கண்டவருண்டோ கழறுமினீரே. (ச)

அதிதிதன்மைந்த ரலமருகாலைப், பிரமகீதையைப் பேசினனெவனோ, சிதாகாயத்திற் றிருவுருத்தாங்கி, மறலியைமுனிந்தவரதனெவனோ, வரன்முறையுலகம் வயின்வயினுதிக்க, நான்முகத்திருக்கு நான்மறையுரைத்தன், றுபநிடத்திலொளித்தவனெவனோ, வவனே பிரமமென்றறிமனனே. (ரு)

மூலமென்றழைத்த முனைக்கொம்பியானை, வருத்தந்தீர்ப்பான் வந்தவனெவனோ, தூணிலுமிருப்பன் றுரும்பிலுமிருப்ப, னெனுமழசொல்லுக் கெதிர்ந்தவனெவனோ, துகிலுரிகாலைத் துருவதன்மகட்குமாளாத்துகிலை வருத்தினனெவனோ, வருச்சுனர்க்காக வமரிடையிருந்தாங், குணர்மெய்ஞ்ஞான முரைத்தவனெவனோ, வவ்வனேபிரம மென்றறிமன்னே. (சு)

கல்லாலின்கீழ்த் கடவுளாகிப், பொல்லாஞானம் புரிந்தவனெவனோ, மால்வரைவில்லாய்வலியவர்புரங்க, ணீறெழவொருக்கி நின்றமூவரைச், சேவடிநீழலிற் சேர்த்தவனெவனோ, காலனைமாட்டிக் கவின்சிறுபாலன், மரணந்தவிர்ப்பான் வந்தவனெவனோ, வவனே பிரம மென்றறிமன்னே. (எ)

உளனேபிரம முயிரோபிரமம், வானேபிரம மறையோபிரம,நா
னேபிரம நாடுங்காலே. (௮)

வடிவோபிரம மதியோபிரம,மொழியோபிரம முணர்வோபிரம,
மறிவோபிரம மாயுங்காலே. (௯)

இருமலவழக்கு மிருவினைத்தொடரு. மும்மலச்செருக்கு நால்
வகைவாக்கு, ஐவகைப்பொறியு மறுவகைக்குற்றமு, மற்றலன்றி
யறிவாகாயே. (௧0)

கண்ணொளிகண்ணே கதிரொளிகதிரே. கண்ணாகாதே கதிருங்
கண்ணும், கதிராகாதே கலப்பின்வைப்பே. (௧௧)

வானேவளியோ மறுகனல்புனலோ, மண்ணேமதியோ வளரெ
ன்றமிழோ, யானேபரம்பொரு ளெட்டும்பிரிவே, தானேயதுவேயது
தானென்ப, மானுதுவும் வழக்கச்சொல்லே,நானேயதுவென நாட
லாமே. (௧௨)

இரண்டாங்காண்ட முற்றிற்று.

ஆக இயல் - ௫ - க்கு, சூத்திரம் - ௧௧௧.

---

சத்தியஞானபோத முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

